(*b*) The matter is under the consideration of the Board of Revenue (Food Production).

SRI S. M. ANNAMALAI : ரெவின்யு போர்டுக்கு ஆலோசனைக்கு வந்து எவ்வளவு நாட்கள் ஆகின்றன ? ஏன் இவ்வளவு காலதாமதம் ஆகிறது ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இதிலே கஷ்டம் என்னவென்றால் இது 'அபாண்ட்டன்டு ஸோர்ஸ் ஆப் இர்ரிகேஷன்'. அது ரயில்வே லயனை பாதிக்கக்கூடிய ஒரு ஏரி. ஆகையினாலே, ரயில்வே அதிகாரிகளையும் இதுபற்றி கேட்க வேண்டியிருக்கிறது. ரயில்வே லயனை பாதிக்காத அளவிலே எந்த மட்டத்திற்கு எப்படிச் செய்யலாம் என்பதையெல்லாம் கவனித்துச் செய்ய கொஞ்சம் தாமதமாகிறது.

*Fertilizers*

* 106 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : கனம் ரெவின்யு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

கூட்டுறவு சங்கங்களுக்கு உரம் அலாட்மெண்டு நேரடியாக ஜில்லா மத்திய சங்கத்திலிருந்து போவதை நிறுத்தி தாலுகா கூட்டுறவு மார்க்கெட்டிங் சொஸைடிகளின் மூலம் விநியோகம் செய்ய உத்தேசம் உண்டா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : The District Co-operative Supply and Marketing Society functions as the Government stockist in the district and in certain centres it also functions as the retail distributor. So far as the stockist function is concerned, no change is contemplated.

As regards the retail distribution, it has been decided that the District Co-operative Supply and Marketing Societies should not function as retail distributors in places where retail distribution can be entrusted to the local primary societies, viz., Taluk Marketing Societies, Village Credit Societies and Agricultural Banks, etc., and this decision is being implemented.

SRI V. K. KOTHANDARAMAN : மத்திய சங்கத்திலிருந்து 'அலாட்மெண்டு' செய்வதால் பல விதத்திலே விவசாயிகள் கஷ்டப்படுகிறார்கள். விநியோகம் செய்வதிலே கூட பல விதத்தில் ஊழல்கள் ஏற்படுகின்றன என்கின்ற காரணத்தினால், இன்றைக்கு எப்படி ஜில்லா போர்டு அதிகாரம் ஒரு இடத்தில் இருக்கக்கூடாது, பிளாக் லெவலில் பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் மூலம் அதிகாரம் பரவலாக இருக்கவேண்டுமென்று சொல்லுவது போல், பிளாக் மூலமாக பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் மூலம் விநியோகம் செய்வதற்கு ஏற்பாடு செய்யப்படுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : மத்திய ஸ்தாபனத்தின் மூலமாக மற்ற கிளை ஸ்தாபனங்களுக்கெல்லாம் அனுப்ப வேண்டும். முன்னாலேயே சொன்னேன் அந்த வகையிலே விநி

11th August 1960]

யோசிக்கப்படுகிறது என்று. அவ்வப்பொழுது அந்தந்த நிலைமையை அனுசரித்து 'பிராபர் இன்ஸ்ட்ரக்ஷன்ஸ்' கொடுப்பதற்கு கூட்டுறவுச் சங்கங்களின் ரிஜிஸ்ட்ரார் ஏற்பாடு செய்வார்கள்.

SRI T. T. DANIEL : May I know whether officers are appointed to make periodical checking to find out whether these co-operative societies are functioning properly and especially whether physical checking—not merely account checking—is actually made?

THE HON. SRI M. A. MANICKAVELU : I presume so.

SRI V. SUBBIAH : ஜில்லா சென்டிரல் ஸ்டோர்ஸ் மூலம் விநியோகம் செய்வதினால், கிராமாந்திர விவசாயிகளுக்கு அகில தொடர்போ அல்லது அவர்கள் அதில் அங்கத்தினர்களாகவோ இல்லாமல் இருப்பதை முன்னிட்டு இரண்டுவித கமிஷன் ஏற்படுகிறது. ஒன்று ஜில்லா ஸ்டோர்ஸ் கமிஷன் கொடுத்து அங்கிருந்து மார்கெட்டிங் சொஸைடிகளுக்கு வருவதற்கு உள்ள வாடகை மற்ற செலவுகளும் சேர்ந்து விடுவதால் நிறைய செலவாவதை முன்னிட்டு, கிராம விவசாயிகள் தொடர்பு உள்ள மார்கெட்டிங் சொஸைடிகளிடம் விநியோகத்தை ஒப்படைப்பது பொருத்தமாக இருக்காதா என்பதை யோசிக்க வேண்டும்.

THE HON. SRI M. A. MANICKAVELU : இந்த இலாகா அமைச்சர் இரண்டு நாட்களில் வந்துவிடுவார்கள். அவர்களிடம் இந்த விஷயத்தைச் சொல்லுகிறேன்.

SRI A. GOVINDASAMY : இப்பொழுது சமுதாய நல திட்டப் பகுதிகளில் ஒரு சில கிராமங்களில் இருக்கிற சொஸைடிகளின் மூலம் உரம் வழங்கப்படுகிறது. எந்தெந்த கிராமங்களில் சொஸைடிகள் இருக்கின்றனவோ, அந்த சொஸைடிகளின் மூலம் அந்தக் கிராமத் தேவையை அறிந்து உரம் விநியோகம் செய்வதற்கு அரசாங்கம் புதிய உத்தரவு போடுமா?

THE HON. SRI M. A. MANICKAVELU : இந்த விஷயத்தையும் மனதில், கவனத்தில் வைத்துக்கொள்ளுகிறேன்.

*Payment of Sivoijama for the cultivation of Government* ***fallow lands***

*** 107 Q.—SRI P. G. MANICKAM :** கனம் ரெவின்யு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 1960-ம் வருடம் மார்ச் மாதம் 21-ல் 489-ம் எண் கேள்விக்கு அளித்த பதிலையொட்டி நம் மாநிலத்திலே சர்க்கார் தரிசு நிலமாகிய 1, 13, 394 எக்கர் நிலத்திலே சர்க்காரின் அனுமதியில்லாமல் விவசாயம் செய்து கொண்டிருக்கும் விவசாயிகளுள் எத்தனை பேர்கள் சிவாஜிமா செலுத்திக் கொண்டு வருகிறார்கள்?